உ

ஓம் குஹாய நம :

# திருப்புகழமிர்தம்



" குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் றாள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்."

மலர் 4. Vol 4. | பிரமாதி ஹூ பங்குனி மீ 1உ
மார்ச்சுமீ -1940 | இதழ் 12 NO : 12

## திருப்புகழ்

### திருவாவினன்குடி (பழநி)

உலகபசு பாச தொந்த — மதுவான
உறவுகிளை தாயர் தந்தை — மனைபாலர்
மலசலசு வாச சஞ்ச — லமதாலென்
மதிநிலைகெ டாம லுன்ற — னருள்தாராய்
சலமறுகு பூளை தும்பை — யணிசேயே
சரவணப வாமு குந்தன் — மருகோனே
பலகலைசி வாக மங்கள் — பயில்வோனே
பழநிமலை வாழ வந்த — பெருமாளே.

### பதவுரை.

சலம் - கங்காதேவியையும், அறுகு - அறுகம் புல்லையும், பூளை - பூளை மலரையும், தும்பை - தும்பை மலரையும், அணிசேயே - தரித்துக் கொண்டுள்ள சிவமூர்த்தியின் திருக்குமாரரே! சரவணபவா - சரவண தடாகத்தில் தோன்றியருளினவரே! முகுந்தன் மருகோனே - திருமாலினது மருகரே! பலகலை - பற்பல நூல்களையும், சிவஆகமங்கள் - சிவசம்பந்தமான ஆகமங்களையும், பயில்வோனே - திருவாய்மலர்ந்தருளியவரே! பழநிமலைவாழ

வந்த பெருமாளே - பழநி மாமலை இனிது சிறப்புறுமாறு அதில் எழுந்தருளி யுள்ள பெருமையின் மிக்கவரே! உலக பசு பாச தொந்தம் அதுஆன - உலகத்தில் ஆன்மாக்களைக் கட்டுப்படுத்தும் மலபந்த சொரூபங்களான, உறவு - சுற்றம், கிளை - சகோதரர், தாயர் தந்தை - தாய்தந்தையர், மனை - மனைவி, பாலர் - குழந்தைகள் முதலியவர்களாலும், மல சல சுவாசசஞ்சலம்அதால் - மலஜலஉபாதைகளாலும்பிராணவாயுவினாலும்உண்டாகும்துன்பங்களால்,என் மதிநிலை கெடாமல் - அடியேனுடைய அறிவு நிலையானது கெட்டுப் போகாமலிருக்குமாறு, உன்றன் அருள் தாராய் - தேவரீரது திருவருளைத் தந்து காத்தருள வேண்டும்.

## பொழிப்புரை.

கங்காநதியையும் அறுகம் புல்லையும் பூளைப்பூவையும் தும்பை மலரையும் அணிந்து கொண்டுள்ள சிவகுமாரரே! சரவணப் பொய்கையில் திருவவதரித்தவரே! திருமால்மருகரே! பற்பல சாத்திரங்களையும் சிவாகமங்களையும் சொல்லி யருளினவரே! பழநிமலை சிறந்து உய்யுமாறு அதில் எழுந்தருளி யுள்ள பெருமித முடையவரே! உலகத்தின்கண் உயிர்களைக் கட்டுப் படுத்தும் மலபந்தங்களாகிய சுற்றத்தார் துணைவர் தாய் தந்தையர் மனைவி மக்கள் முதலியவராலும், மலஜல பிராண வாயுக்களாலும் உண்டாகும் துன்பங்களால் அடியேனுடைய மெய்யறிவு நிலை அழியாமலிருக்குமாறு தேவரீருடைய திருவருளைத் தந்து ஆட்கொள்ளல் வேண்டும்.

## விரிவுரை.

### உலக பசுபாச தொந்தம்:—

பதியை யறிந்து அடைய வொட்டாமல் பசுக்களைக் கட்டுப்படுத்தி மயக்குவிப்பது பாசம். பசுக்களுக்குப்பாசம் செம்பிற் களிம்புபோல் வேறுகாரணமின்றி அநாதியே உடனிருந்து வருதலின், ஆன்மாத்தானே யுணருமாறின்றிக் கருவிகளைப் பற்றி நின்றுணர்வதாயிற்று.

அந்தக் காரண மவற்றினென் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பதின் றஞ்சவத் தைத்தே
—சிவஞானபோதம் 4-ம் சூத்திரம்,





பாச சம்பந்தத்தினால் ஆன்மா பசுவெனப் பட்டது. (பதி ஞானத்தால்) பாச நீக்கமுற்ற முத்தான்மா பசுவெனப் படான்.

"பசு: பசுத்வஸம் யோகாந்முக்த: பசுருச்யதே"
—முண்டகோபநிஷத்

"பாசமற்ற வேதகுரு" பரனாகிய குமரேசனுடைய திருவடி ஞானத்தாலே பாசத்தை யறுத்து அத்துவித முத்தியை யடைதல் வேண்டும்.

### உறவுகிளை......மனைபாலர்:—

பாசத்தினால் வந்த மயக்கவுணர்வினால் துணையாகாத உறவினர், மனைவி மகார் முதலியவரைத் துணையென நம்பி வறிதே நாள்களைக் கழித்து அவமே கெட்டு ஆன்மாக்கள் அல்லற் படுகின்றன.

### மதி நிலை கெடாமல்:—

ஆன்மாக்களுக்குள்ள அறிவை ஆணவமலம் மறைத்து அறிய விடாமல் தடுக்கின்றது. அதனால் ஆன்மா அறிவு கெட்டு தன்னுண்மையையும் தலைவனுண்மையையும் அறியாமல் தவிக்கின்றது.

ஞானசொரூபமா யுள்ள சிவம் என்ற அருட்பெருஞ்ஜோதி ஆன்மாவிற்கு உள்ளும் புறமும் வியாபித்திருக்கும்போது ஆணவமலமென்னும் இருள் ஆன்மாவை மறைப்பது யாங்ஙனம்? எனின் அறியாது கடாயினாய்; கூறுதும்.

"உலுகஸ்ய யதாபாநு ரந்தகார: ப்ரதீயதே!
ஸ்வர்காசே பராநந்தே தமோ மூடஸ்ய ஜாயதே!!"

என்று ஆத்மபோதோ பநிஷத் கூறுமாற்றானே, "கூகைக்குச் சூரியன் இருட்டாகக் காணப்படுமாறு மூடனுக்குச் சுவப்ரகாச பராநந்தத்தில் இருட்டுள்ளதாகும்" என்பது அறியப்படுகின்றது. அதன் உண்மை யுணரற்பாற்று. தன்னுயிர்க் குயிராய் நிற்குங் கடவுட்டன்மையே "ஸ்வப்ரகாச பராநந்தம்" எனப்பட்டது. இங்ஙனம் கூகை பகற்குருடாயிருத்தற்கு அதன் விழிக்குற்றமேயாம்; சூரியன்குற்றமன்று. அதுபோல் யாண்டும் நீக்கமறநிறைந்து

ஞானப்பகலாகவே யுள்ள தெய்வத்தைத் தரிசியாது குருடா யிருத்தற்கு ஆணவமலக்குற்றமேயாம் என்பதை உணர்க. பூத விருளும் ஆணவாதி ஐவகைப்பாசங்களும் சிவபரம்பொருளை மறையாமே சீவனது அறிவையே மறைக்குமென்பதையுந் தெள் ளிதினோர்க. யாண்டும் ஞானப்பகலா யிருத்தலினாலும், அவ்வா றிருக்கும் பதிக்குச் சுட்டியறியக் கிடப்ப தோன்றின்மையினு லும், அப்பதியை யறியறிவிருந்தும் பசு அறியாது நிற்றலினாலும், அறியறிவில்லாப் பாசமும் அப்பதியை மறையாது அப்பிரகாச மாய்க் கிடத்தலினாலுமே, சிவஞானபோதம் "யாவையுஞ் சூனி யஞ் சத்தெதிர்" என்று 7-ஞ்சூத்திரம் உபதேசிக்கின்றது. விளங் கி நில்லாமையே சூனியம் எனப்பட்டது. கூகைக்கு இருளில் பார்வை நிகழுமாறு சீவனுக்கும் அஞ்ஞான தசையிற் சிற்றறிவு நிகழும்.

ஆதலால் அவ்வாணவ மறைப்பினின்று நீங்கி சிவத்தை யடைய அருளின்துணை அவசிய மாகின்றது. அதனைத்தான் "சத்திநிபாதம்" என்பர். சத்தி--அருள், நி-மிகுதி, பாதம்-பதி தல், (விழுதல்) மிகுதியாக அருள்பதிதல் என்பதாம். அத்திரு வருளைத் தரவேண்டும் என்று சுவாமிகள் இப்பாசுரத்தில் எம் பெருமானை வேண்டுகின்றார்.

"மதிநிலை கெடாமலுன்ற னருள்தாராய்"

## சலம் அறுகு:—

கங்கையைத் தரித்தவரலாற்றை திருப்புகழமிர்தம் 2வது மலர் 163-ம் பக்கத்திலும், அறுகின்பெருமையை 3வதுமலர் 266 வது பக்கத்திலுங்காண்க.

## சிவாகமங்கள்:—

ஆகமம் என்னும் வடமொழிப்பதம் "வந்தது" என்று பொருள்படும். "எங்கிருந்துவந்தது"? என்ற வினாவுக்குப் "பரம ஆப்தரது திருநாவிலிருந்து வந்தது" என்பதுவிடையாகும். பர மாப்தர் சிவபெருமானேயாம். சிவபெருமான் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு பாதங்களையும் விளக்கி ஆகமங்களைக்கூறினர்.



"நாலாரு மாகமத்தின் நூலாய ஞானமுத்தி
நாடோறு நானுரைத்த நெறியாக"
—திருப்புகழ்.

ஐம்முகருக்கும் அறுமுகருக்கும் பேதமின்றாதலின் குமாரக் கடவுளே ஆகமங்களைக் கூறினர் என்பது இழுக்காகாது.

## சரவணபவ்ா:—

இதற்குப் பொருள் முந்திய திருப்புகழமிர்தம் 1-மலர் 261-ம்பக்கத்தில் கூறி யிருக்கின்றோம். ஆண்டுக்காண்க.

## முகுந்தன்:—

முத்தியைக்கொடுப்பவர். மு - முத்தி, கு - பூமி, த-இவற்றைத்தரு பவர்; தன்னைவழிபடுமடியவர்கட்குத் தனது பரமபதத்தையும் இந்தஉலகசுகத்தையும் அருள்புரிபவர், என்றுபொருள் படும்.

## கருத்துரை.

சிவகுமாரரே! சரவணபவ! மாயன்மருக! வேதாக மவித்தக! பழநியாண்டவ! பாசத்தினின்று நீங்கி பதிஞானம் பெற்றுய்ய தேவரீரது திருவருளைத் தந் தாளவேண்டும்.



உ

சிவமயம் :

# கந்தரலங்காரம்

(316-வது பக்கத் தொடர்ச்சி)

(13) ஒருவரைப் பங்கி னுடையாள் குமார னுடைமணிசேர்
திருவரைக் கிண்கிணி யோசை படத்திடுக் கிட்டரக்கர்
வெருவரத் திக்குச் செவிடுபட் டெட்டுவெற் புங்கனகப்
பருவரைக் குன்று மதிர்ந்தன தேவர் பயங்கெட்டதே.

## பதவுரை.

ஒருவரை - தனிப்பெருந் தலைவராகிய சிவபெருமானை, பங்கில் உடையாள் - தமதுவலப்பக்கல் உடையவளாகிய உமாதேவியாரது, குமாரன் உடை - திருப்புதல்வராகிய முருகப் பெருமானுடைய, திருஅரை - அழகிய இடையில் விளங்குகின்ற, மணிசேர் கிண்கிணி ஓசைபட - நவமணிபதித்த கிண்கிணியினது ஒலிபட்டமாத்திரத்தில், அரக்கர் திடுக்கிட்டு - அசுரர்கள் துணுக்கமுற்று, வெருவர - அஞ்சிநடுங்க, திக்கு செவிடு பட்டு - எட்டுத் திசைகளிலுள்ளோரும் செவிடுபட்டு, எட்டுவெற்பும் - குலமலைகள் எட்டும், பருவரை - பெரியமலையாகிய, கனககுன்றும் அதிர்ந்தன - பொன்மலையாகிய மேருபருவதமும் அடிபெயர்ந்து அதிர்ந்து போயின, தேவர் பயம் கெட்டது - தேவர்களுக்கு அசுரரிடமிருந்த பயம் அழிந்து விட்டது. (ஏ-அசை)

## விரிவுரை.

ஒருவர்:— ஒப்பற்றவர். சிவபெருமான் ஒருவரே சமானமில்லாதவர்; தனிப்பெருந்தலைவர்; முழுமுதற்கடவுள்; மூவர் தேவாதிகளால்வணங்கும் முக்கட்பரம்பொருள். "தனக்குவமையில்லாதான்" என்ற பொதுமறைக்கு இலக்கானவர்.

"ஸசிவ ஏகோ தேவ:" (சிவமூர்த்தி ஒருவரே தெய்வம்)
"ஏகஏவ சிவோநித்ய:" (சிவபெருமான் ஒருவரே நித்தியர்)
"ஏக ஏவ ருத்ரோ நத்விதீயாய தஸ்தே"
(உருத்திர மூர்த்தி ஒருவரே யுள்ளவர்; இரண்டாவது பொருளில்லை)



என்ற சுருதிவசனங்கள் சிவபெருமானை ஒருவன்என்ற சப்தத்தால் புகழ்கின்றன.

"ஒருவனு யுலகேத்த நின்ற நாளோ" —அப்பர்.
ஒருவனுகி நின்றுனிவ் வுலகெலாம்
இருவ ராகிநின் றூர்கட் கறிகிலான்
அருவனாவரை யார்த்தவ னார்கழல்
பரவு வாரவர் பாவம் பறையுமே. —அப்பர்.

திருவரைக்கிண்கிணிஓசைபட:- குழந்தைவேலப்பரது திருவிடையிற்கட்டியுள்ள செஞ்கிறுசதங்கை சிறிதுஅசைய அதனுலுண்டாகிய ஒலிபட்ட மாத்திரத்தில், அவுணர்கள் திடுக்கிட்டு இடியேறுண்டநாகம்போல் நடுங்கியயந்தனர்.

திக்குசெவிடுபட்டு:--இடவாகுபெயரால் திக்குஎன்பது திக்கிலுள்ளவரைக் கூறப்பட்டது. எண்டிசையிலுள்ளவர்கள்செவிடுபட்டனர். எட்டுவெற்பும்...........அழிந்தன:-- அஷ்டகுலாசலங்களாகிய கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி கந்தமாதனம் என்ற எட்டுமலைகளும் பொன்மேருகிரியும் அடிபெயர்ந்து கிடுகிடு வென்று அதிர்ந்தன.

தேவர்பயங்கெட்டதே:--- பெருமானுடைய திருவரைச் சதங்கையொலியின் பெருமையைக்கண்ட தேவர்கள், இனிஅசுரரழிந்தார் என்றுதேறி பன்னாளாகக் கொண்டிருந்த அச்சத்தை யறவேநீக்கிக் கொண்டனர்.

முருகக்கடவுளுடைய அரைநாண்மணியின் ஓசையின் பெருமையை வியந்துரைத்தனர். வேறு ஒரு கந்தரலங்காரப் பாடலாலும் அறிக.

மண்கமழ் முந்தித் திருமால் வலம்புரி யோசையந்த
விண்கமழ் சோலையும் வாவியுங் கேட்டது வேலெடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளைத் திருவரையிற்
கிண்கிணி யோசை பதினு லுலகமுங் கேட்டதுவே.

## கருத்துரை.

குழந்தை முருகன் திருவரைச் சதங்கை யொலியால், அரக்கர் துணுக்குற் றஞ்சினர்; உலகஞ் செவிடுபட்டது; மலைகளதிர்ந்தன; தேவர் பயங்கெட்டது.

ஓம் குஹாயநம :

# சிவாநந்தலஹரீ

(ஆதிசங்கரர் அருளிச்செய்தது)

(317-வது பக்கத் தொடர்ச்சி)

ரோ[3]தஸ்தோயஹ்ருத: ச்ரமேணபதி[2]கச்சா[2]யாம் தரோவ்ருஷ்டிதோ
பீ[4]த: ஸ்வஸ்[2]த க்ரு[3]ஹம் க்ருஹ[3]ஸ்த மதி[2]தி[2]ர்[3]தீந: ப்ர[4]பும் தா[4]ர்மிகம்
தீ[3]பம் ஸந்தமஸாகுலச்ச சி[2]கிநம் சீதாவ்ருதஸ்த்வம் த[2]தா
சேத: ஸர்வ[4]பயாபஹம் வ்ரஜ ஸ[2]ுகம் சம்[3]போ: ப[4]தாம்போருஹம்

## பதவுரை.

சேத:—ஓமனமே!
தோயஹ்ருத: — வேகமாக நீரினல் இழுக்கப் பட்டவன்
ரோத:—கரையையும்
பதிக:—வழிநடப்பவன்
ச்ரமேண—களைப்பினல்
தரோ—மரத்தினுடைய
சாயாம்—நிழலையும்
வ்ருஷ்டி:—மழைக்கு
பீத:—பயந்தவன்
ஸ்வஸ்தக்ருஹ: — சுகமான வீட்டையும்
அதிதி:—அதிதியானவன்
க்ருஹஸ்தம் - இல்லறத்தானையும்
தீந: - ஏழையானவன்
தார்மிகம் - தருமகுணமுள்ள
ப்ரபும் - கொடையாளியையும்,

ஸந்தமஸ - காடாந்தகாரத்தால்
ஆகுல: - வருந்துகின்றவன்
தீப: - விளக்கையும்
சீதாவ்ருத:- பனியாலும் குளிராலும் பீடிக்கப்பட்டவன்
சிகிநஞ்ச - நெருப்பையும்
யதா - எப்படியடைகின்றனே
ததா - அப்படி
த்வம் - நீயும்
ஸர்வபயாபஹம் - எல்லாபயங்களேயும் நீக்கவல்லதாயும்
சுகம் - இன்பத்தைவழங்குவதாயுமுள்ள
சம்போ — சிவபெருமானுடைய
பதாம்போருஹம் — தாமரைமலர் போன்றதிருவடியை
வ்ரஜ - (தேடி) அடையக்கடவாய்.

## பொழிப்புரை.

ஓ மனமே! வெள்ளம் வழிநடை மழை பசி மிடி இருள் பனி இவைகளால் பீடிக்கப்பட்டவர், முறையே கரை நிழல் வீடு இல்லறத்தான் கொடையாளி விளக்கு நெருப்பு இவைகளைத் தேடியடைவதைப்போல், நீயும் பயங்களை யெல்லாம் கெடுத்து பேரின்பத்தைவழங்கும் சிவபெருமானுடைய சீர்பாதமலரைத் தேடியுடைவாயாக.



ஓம் குஹாயநம :

# கந்தர் திருவிளையாடல்

(321-வது பக்கத் தொடர்ச்சி.)

வீரவாகுதேவர் ஆயிரம அவுணவீரர்களைக் கொன்று சூரபன் மனுடைய அவைக்களத்தைநீங்கிச் செல்லும்போது, அவன்தன் அருகிலுள்ள சதமுகன் என்பானைநோக்கி, "இவன் ஆறுமுகனுடைய ஆள்; நம்மை இகழ்ந்து குமரனைப் புகழ்ந்து அவமதித்துச் செல்கின்றான்; தூதனுதலின் அவனைக் கொல்லாது அவனைக்கட்டிக்கொண்டு வருவாய்" என்று கூறினன். சதமுகன் புறப்பட்டு இலக்கம் வீரருடனும் பல ஆயுதங்களுடனும் சென்று வீரவாகுதேவரைத் தொடர்ந்து, "கள்வ! நில்; உனதுவலியை ஒரு நொடியில் அழிப்பேன். இனி நீ தப்பிப்போக முடியாது" என்று கூறிக்கொண்டு நெருங்கினன். வீரவாகுதேவர் "முருகக்கடவுளுடைய அறவுரையைக் கேளாத சூரனுடைய ஆளாகிய இவனையும் நகரையும் அழிப்பேன்" என்று எண்ணி, "படையோடு வருதி" என்றுஅழைத்தார்.

அப்பொழுது சதமுகனைச் சூழ்ந்த இலக்கம் வீரரும் அவரை எதிர்த்து பல ஆயுதங்களை விடுத்தார்கள். வீரவாகுதேவர் அவ்வாயுதங்களைத் தூள்படுத்தி, இருபதினயிரம் முடிகளையுடைய ஒருகுளிகையை விரைவிற் பிடுங்கி அவர்கள்மேல் எறிந்தார். அதனல் இலக்கம் வீரரும் ஒருநொடியில் அழிந்தார்கள். அதுகண்டசதமுகன்வருந்தி கோபித்து, வேல்இருப்புலக்கை சக்கரம் முதலிய பலபடைகளை விடுத்தான். வீரவாகுதேவர் மலைபோன்ற ஒருசிகரியைப் பிடுங்கி எறிந்தார். அவன் ஆயிரம் பாணங்களால் அதனை அழித்து, அவர்மார்பில் ஆயிரம்பாணங்களை விடுத்தான். அவர்போய் அவன்வில்லைப்பறித்து முறித்துஎறி

தார். அவன் நூறுகைகளைநீட்டி அவரைப் பிடித்தான். அவர் அவனைப் பூமியில் விழும்படி உதைத்து வாய்கள்தோறும் குருதி வழிய மார்பில் ஒருபாதத்தையூன்றி, மற்றொருபாதத்தால் நூறு தலைகளையும் இடறி உருட்டித் தள்ளிக்கொன்று, "குகமூர்த்தியை யிகழ்ந்த சூரனிருக்கும் அவையை யழித்தபின் இந்நகரையும் அழிப்பேன்." என்று எண்ணினார்.

வீரவாகுதேவர் வேற்படைக் கடவுளைத் தியானித்து, அவருடைய திருவருளால் புயங்கள் திசையையளக்கவும், முடி வானுலகத்தையளக்கவும், பாதம் பூவுலகத்தை யளக்கவும், மிகப்பெரியதோருருவங்கொண்டு நின்றார். அப் பாரந் தாங்கலாற்றாது, ஆதிசேடனும் ஆதிகூர்மமும் பயந்தன. வீரமகேந்திரம் நடுங்கியது. அவர் பாதம் ஊன்றிய இடந்தோறும் நிலம்வெடித்து சமுத்திர ஜலம்வெளிப்பட்டு சூரனுடைய கோயிலைவளைந்து அவன் அத்தாணி மண்டபத்திலும் போய் பலரை வாரிக்கொண்டு கடலிற் பாய்ந்தது. அவ்வுருவத்தைக் கண்டோர் கையைஉதறி "அம்மவோ" என்று அஞ்சி ஓடினார்கள். சூரனுடைய கோயிலைக் காவல்புரிகின்ற ஐம்பது வெள்ளம் அவுணர்கள் அவரைக்கண்டு அஞ்சி, சூரனுக்குப் பயந்து பல படைக்கலங்களை எடுத்துவீசி ஆரவாரித்தார்கள். வீரவாகுதேவர் தோள்தட்டி யார்த்து, "சிறந்த வீரர்கள் மேலன்றி வாட்படையை எடேன்" என்று அவுணசேனைகளுட் புகுந்து மிதித்தும், உதைத்தும், நசுக்கியும், அடித்தும், குத்தியும், அரைத்தும், புடைத்தும் இப்படி பல செயல்களால் ஐம்பது வெள்ளஞ் சேனைகளையும் விரைவில் அழித்துவிட்டார். உதிர வெள்ளம் ஓடியது.

அவுணவெள்ளத்தை யழித்த வீரவாகுதேவர், ஐஞ்ஞூறு யோசனையகன்று ஆயிரம் யோசனை உயர்ந்து ஓரிலக்கஞ் சிகரங்களைத் தாங்கி மேருமலைப்போல் சூரன் கோயில்முன் நிற்கும் ஒரு வேரத்தைக்கண்டு, அதனைப்பறித்து ஒருகரத்திலேந்தி, சூரனுடைய அவைக்களத்தில் வீசி, இடியும் அஞ்ச ஆரவாரித்தார். அது அம்மண்டபத்தில் வீழ்ந்து சூரபன்மனும் புதல்வர்களும் வேறுசிலரும் இருக்கின்ற சில இடங்களொழிய அச்சபை முழுவதையும் அழித்தது. சுவர்கள் இடிந்தன; உத்திரங்கள் பொடிந்



தன; தூண்கள்முறிந்தன. சிலர்ஓடினர்; சிலர்இறந்தனர்; சிலர் ஊறுபாடுற்றனர். இதுகண்ட சூரபன்மன் ஆயிரம் வடவைத் தீயைப்போல் சினந்து, அருகில்நின்ற ஆயிரந்தோள்களும் ஐஞ்ஞூறு முகங்களையுமுடைய ஆயிரம் அவுண வீரரைப்பார்த்து, "இவனைப்பிடித்து உடம்பில் ஊறுசெய்து சிறையிடுங்கள்" என்றான்.

வீரவாகுதேவர் சூரனது நகரை அழிக்க எண்ணி, செய்குன்று மண்டபம் சிகரம் சூளிகை இவைகளைப்பறித்துப்பறித்து எறிந்தார். சாலைகளிலுள்ள தேர் யானை குதிரைகளை அள்ளி அள்ளி திசைகள் தோறும் எறிந்தார். மதிலை இடித்து அகழியைத்தூர்த்தார். அந்நகரிலுள்ளோர் கலங்கி நாலுபக்கங்களிலும் ஓடினார்கள். பலர் மடிந்தனர். எண்பதினாயிரம் யோசனை பரப்புள்ள அந்நகரமுழுவதும் அழிந்தது. ஊழிகாலம்போல் இரைச்சலுண்டானது. இரத்தவெள்ளம் எங்கும் ஓடியது.

சூரனால் அனுப்பப்பட்ட சகத்திரவாகுகள் இடியேறுபோல ஆர்த்து, "ஒருமுகமும்இருபுயமுமுடையஒருவனைக் கொல்ல, ஆயிரங் கரங்களும் ஐஞ்ஞூறு தலைகளுமுடைய நாம் ஆயிரவீரர் செய்வது பழி" என்று மனந்தளர்ந்தும், சினந்தும் விரைந்துவந்து எதிர்த்தார்கள். வீரவாகுதேவர் அதுகண்டு, முப்புரமெரித்த முதல்வன்போல் சிரித்து ஒருமாமரத்தைப் பறித்துச் சுழற்றினார். சகத்திரவாகுகள் தோமரம் குலிசம் முதலிய பல படைக்கலங்களை வீசினார்கள். வீரவாகுதேவர் மாமரத்தால் அப்படைக் கலங்களைப் பொடித்து அவர்களது சிரம் கரம் உரங்களைத் தகர்ந்து அவர்களெல்லாரையும் கொன்றார். உதிரவெள்ளம் அவ்வூரிலுள்ளபலரை வாரிக்கொண்டு கடலிற்புகுந்தது.

விண்ணிடைநின்று போரைப்பார்த்துநின்ற தூதர்கள் ஓடி சூரபன்மனிடம் நிகழ்ந்தது கூற, சூரபன்மன் மிகமிகக்கோதித்து "ஒரு குழந்தையின் தூதன் பலரைக் கொன்று நின்று இன்னமும் அகலுகின்றிலன், நமது வெற்றி நன்று நன்று" என்று சிரித்

தான். பத்துச் சிரங்களையுடைய வச்சிரவாகு என்ற இளைய குமாரன் அவனைப் பணிந்து, "ஐய! தூதன்பொருட்டு இப்படி சினந்துரைத்தல் தகுமோ? ஒரு நொடிப்பொழுதில் நான் சென்று அவனைப்பிடித்து வருவேன்" என்று விடைபெற்று, ஆயுதசாலையுட் சென்று, வில் வாள் கவசம் முதலியன அணிந்து, தும்பை மாலையைச்சூடி ஆயிரங் குதிரை பூண்ட ஓர் தேரின்மீது ஏறினான். அவனது அமைச்சரும் தோழரும் உடன்சென்றனர். ஐஞ்ஞூறு வெள்ளம் தேர்களும், ஐஞ்ஞூறுவெள்ளம்யானைகளும், ஆயிரம் வெள்ளம் குதிரைகளும், இரண்டாயிரம் வெள்ளம் காலாட்களும் கடல்போல் ஒலித்துச் சென்றன. அவன் இடக்கண்ணும் புயமுந் துடித்தன. கொடியற்று வீழ்ந்தது. பலதுர்சகுனங்கள் தோன்றின. வீரவாகுதேவர் அவன்வருகையைக்கண்டு, "இவன்சூரன் மக்களில் ஒருவனும்; இவனைச் சேனையுடன் கொன்று சூரிய அத்தமனத்திற்குள் அறுமுகனரடிமலரைக் காணச்செல்வேன்." என்று சொல்லி குகமூர்த்தியைத்தியானித்து அண்டமுந்திசையும் நடுங்கத் தோள்தட்டியார்த்தார். அப்பேரொலி கேட்ட அவுணவெள்ளங்கள் அனைத்தும் நடுநடுங்கி "ஊழியில் உலகழிக்கும் ஒருவனும் உருத்திர மூர்த்தியின் ஒலியோ?" என்று ஐயுற்றனர். வச்சிரவாகு "பதினாலுலகங்களிலும் இன்றுவரை இத்தகைய ஒலியை யான் கேட்டதில்லை. இவ்வொலியாதோ? அறிகுதிர்" என்னலும் தேர்ப்பாகன், "அரசே! அந்தத் தூதனுடைய ஒலியேயாம்" என்ன, வச்சிரவாகு சினந்து "இப்பொழுதே அவனைப்பிடித்துச் சிறையிடுவேன்" என்று சிரித்துப் போயினான். அவனுடைய சேனைகள் முசலம் ஈட்டி கதை வாள் முதலிய பல ஆயுதங்களை எறிந்து போர்செய்தார்கள். அப்படைக்கலங்கள் படுதலும் உதயசூரியனிடத்திலிருந்து கிரணம்வருதல்போல் வீரவாகு தேவருடைய செம்மேனியில் இரத்தம் உண்டாயிற்று. வீரவாகு தேவர் வெகுண்டு சிலரைத் தாள்களால் தேய்த்தும், அரைத்தும், பிசைந்தும், தேர்களைஉடைத்தும், யானைகுதிரைகளை உதைத்தும், சிலரைப்புடைத்தும் அழித்தார். வச்சிரவாகுவின் மருங்கில் வந்த தோழர் மந்திரிகள் முதலியோரை மாமரத்தால் அடித்துக் கொன்றார். எல்லோரும்அழிந்ததைக்கண்டவச்சிரவாகுவெகுண்டு



வீரவாகுதேவர்முன் வந்து வீரவசனங்களைப் பேசி ஆயிரம் பாணங்களைவிடுத்தான். அவர் அவைகளை ஒரு கரத்தாற்பற்றிப் பொடித்தார். பதினாயிரம் பாணங்களை வச்சிரவாகு தூண்டினான். அவற்றையும் அவர் பொடித்தார். உறுப்புகள் தோறும் பல்லாயிரங் கணைகளைத்துரந்தான். அக்கணைகள் உடம்பிற்பட வீரவாகு தேவர் சிறிது வருந்தி, விரைந்துபோய் அவன்தேரை உதைத்தார். குதிரைகளும் பாகனும் அழிய, வச்சிரவாகு வேறொருதேரிற் பாய்ந்தான். மீண்டும் ஆயிரம்பாணங்களை விடுத்தான். வீரவாகு தேவர் அத்தேரைஎடுத்துவிண்மிசைவீசி,எல்லாத்தேர்களையும்அழித்துவிட்டார்.தேரோடெறியப்பட்டவச்சிரவாகுஇலக்கம்யோசனை தூரம்வானிற்போய்,மீண்டுவந்துவீழ்ந்து,வில்வளைத்துப்போர்செய்யத்தொடங்கினான். அவர்வில்லைப்பிடித்துமுறித்துவிட்டார்.அவன் வாட்படையைஏந்திஎதிர்த்தான்.வீரவாகுதேவரும்வாளெடுத்துப் போர்செய்து வச்சிரவாகுவினுடைய வாளேந்திய வலக்கரத்தை வெட்டினார்.அவன் பிறிதோர் கரத்திலிருந்த தண்டையெறிந்தான். வீரவாகுதேவர் அதனையும் அவன் பத்துத்தலைகளையும் அறுத்து அவனைக் கொன்றார். அதுகண்ட அவுணர்கள் அஞ்சி புலம்பி திசைகள்ஓடி ஒளிந்தார்கள். அப்பொழுது கதிரவன் அஸ்தமயமாயினான்.

(தொடரும்)



கூ

சிவமயம் :

# கற்பு

(326-வது பக்கத் தொடர்ச்சி.)

பெண்மக்கள் நாள்தோறும் சூரியோதயத்திற்குமுன் நித்திரைவிட்டெழுதல்வேண்டும். எழுந்தவுடன் சிறிதுநேரம்கடவுளைச் சிந்திக்கவேண்டும். பிறகு கணவனை வணங்கவேண்டும். கணவனுக்கு ஆயுள், செல்வம், கல்வி, வலிமை, ஞானம் முதலியனஉண்டாகுமாறு இறைவனை வழுத்துதல்வேண்டும். உரல் உலக்கை அம்மி வாயிற்படி இவைகள்மீது பெண்கள் இருக்கக் கூடாது. இருந்தால்இலக்குமிதேவிவிலகுவள். எல்லோரிடத்திலும்இனிமையாகப் பேசிப் பழகவேண்டும். ஒவ்வொருசொல்லும் அமிர்தம் போல் மொழிக்கு மொழி தித்திக்கப் பேசவேண்டும். வெளியிலிருந்து வருங் கணவனை முகமலர்ந்து வரவேற்கவேண்டும். வெளியில் பல கஷ்ட நஷ்டங்கள்பட்டு வருவானாதலால் தமது இன்முகத்தால் அவன்மனதைச் சாந்தப்படுத்தவேண்டும்.

கணவனைவிட்டுத் தனியே தீர்த்தயாத்திரை செய்தல், கூத்துப்பார்க்கப்போதல், தேர்திருவிழாக்கட்குப் போதல் கூடாது. விதிவசத்தால் தனக்கு வாய்த்த கணவன் அழகில்லாதவனாயினும், நற்குணமில்லாதவனாயினும், பிணியாளனாயினும், வறியவனாயினும், வயோதிகனாயினும் மனைவி அவனை அவமதிக்காமல்உபசரிக்க வேண்டும். பிறரிடம் கணவனைப்பற்றி இழித்துக்கூறி தூற்றப்படாது. மாமிவீட்டு விஷயங்களைத் தாய்வீட்டிற்கூறி பழிக்கப்படாது. "தூற்றும்பெண்டிர் கூற்றெனத்தகும்" என்றாள் ஔவைபிராட்டியார்.

கணவன் ஓய்வுபெற்று வீட்டிலிருக்கும்போது, கடவுளது அருள் மார்க்கத்தைப்பற்றியும், இறை வழிபாட்டைப்பற்றியும், ஆவியீடேறு நெறியைப் பற்றியும், கூறுமாறு கேட்டு மனந்தெளிந்து அறிவைவிளக்க வேண்டும்.





அறிவைவளர்த்து நல்வழிப் படுத்தும் நூல்களைக் கணவனைப் படிக்கச்சொல்லித் தாம் கேட்கவேண்டும். கணவன் வேலை நிமித்தம் வெளியே போய்விட்டால் தாமே படித்துக்கொள்ள வேண்டும்.

தன்கணவன் இடம்பமாகப் பணத்தை வீணில் செலவழித்தால் மனைவி இனியவார்த்தை கூறி அவ்வாறு வீணாகும் பணத்தை தருமவழியிலே செலவழித்து இம்மைக்கும் மறுமைக்கும் நன்மைதேடிக் கொள்ளுமாறு வற்புறுத்தி வேண்டிக்கொள்ள வேண்டும்.

வீட்டுவிலக்காகிய நாலாம்நாள் நீராடிய வுடனே தனதுகணவன் முகத்திலே விழிக்கவேண்டும். அந்தநாலாம் நாளன்று கடின பதார்த்தங்களை யுண்ணாமல் பால் தயிர் நெய் முதலிய சத்துவ குண ஆகாரங்களைப் புசித்தால் நல்ல அழகுடைய மக்கள் தோன்றும்.

ஆகார தோடமற அன்னபுசித் தால்நல்ல
ஆகாரம் புத்திரர்பா லாம். —சைவசமயநெறி.

நாலாநாள் நீராடியவுடன் கணவன் ஊரிலில்லையானல் கடவுளைத்தியானித்துசூரியனைத்தரிசிக்கவேண்டும்.ஐந்தாம்நாள்நீராடி நற்கருமங்களில் ஈடுபட வேண்டும். நாலாநாள் ஸ்நானம் செய்தவுடன் பஞ்சகவ்ய மேனும் பாலேனும் நெய்யேனும் உட்கொள்ள வேண்டும். இரவு 2மணிக்குள் விலக்கானல்அன்றுமுதற் கொள்ள வேண்டும். 2மணிக்குமேல் விலக்கானல் மறுநாள்முதல் கணக்கு வைக்கவேண்டும்.

தன்னுடைய கணவனையீன்ற பிதாமாதாக்களிடம் மிகவும் பணிவாக நடந்துகொள்ள வேண்டும். அவர்கள் வயோதிகராகி இருக்கும்போது அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து இனிய உணவுகளை வேளைக்கு வேளைதந்து உபசரிக்கவேண்டும். கணவனுடன் பிறந்தாரையும் அன்பாக ஆதரிக்கவேண்டும். இனிய மொழியால் அவர்கள் மனம் மகிழச்செய்ய வேண்டும்.

கணவன் ஊரில் இல்லாதபோது நல்ல ஆடைஆபரணங்களையணிந்து மலர்முடித்து அலங்கரித்துக் கொள்ளலாகாது. தன்கணவன் வீட்டிலிருக்கும்போது நன்றாக அலங்கரித்துக் கொண்டு அவன் கண்ணும் கருத்தும் மகிழ இலக்குமி தேவிபோல் உலாவ

வேண்டும். கணவன் வீட்டிலுள்ளபோது தலையை விரித்துக் கொண்டு பாழடைந்த முகத்துடன் பார்க்க வழங்காமலிருக்கக் கூடாது.

மஞ்சள் பூசிக் குளிப்பதால் கணவனுக்கு ஆயுள்வளரும், மஞ்சளால் பல கிருமிகள் அழியும்; அதனால் உடல் நலமுறும். திருநீறுதரித்துக் குங்குமந்தரித்து சைவக்கொழுந்துகளாயிருந்து மங்கையர்க்கரசிகளாக காட்சி வழங்கவேண்டும்.

பகவதியாரைப்போலவும், இசைஞானியாரைப்போலவும் நன்மக்களைப் பெற்று உலகிற்கு உபகரிக்கவேண்டும். மக்களுக்கு அவ்வப்போது நல்லறிவு புகட்டவேண்டும்.

சோம்பலாக எப்போதும் இருக்கக்கூடாது. கெடுமதியுடைய பெண்களுடன்கூடி அண்டையயல் வீட்டு விஷயங்களைப் பற்றிப் பேசிவீண்காலங்கழிக்கப்படாது. கற்புடையமடந்தையர்வரலாறுகளைப்பற்றிப் பேசி இன்புறவேண்டும்.

ஒவ்வொரு பெண்மணியும் கற்புத்தெய்வங்களாக விளங்கிப் பொன்றாப்புகழை எய்தல்வேண்டும். பிறந்தவீட்டிற்கும் புகுந்த வீட்டிற்கும் நல்லகீர்த்தியை உண்டாக்க வேண்டும்.

தமதுபெண்குழந்தைகள் ஒவ்வொருவரையும் நல்லறிவுக் கொழுந்துகளாக்கி; கற்புக் கலனணிந்து கணவனிடம் வாழுமாறு பயிற்சி செய்யவேண்டும்.

---



(1) நல்லவரோடு தோழமைகொள்: அப்படிச்செய்தால் நீஅவர்களில் ஒருவராய் விடுவாய்.

(2) காலம் ஓடிக்கொண்டிருக்கிறது. ஒவ்வொரு க்ஷணமும் பகவானின் பூஜையின் பொருட்டும் சேவையின் பொருட்டும் நீ காலத்தைக் கழி.

(3) பணத்திற்காகவும் மணஞ்செய்யாதே, பணம் கையில் இல்லாமலும் மணஞ் செய்யாதே.

M. A. செட்டியார், துறையூர்.

ஓம் குஹாயநம :

# உயிர்களின் கடமை.

சைவப்புலவர் --- திரு. மணிவாசகம் அவர்கள்.

"பொய்யனேன் சிந்தைப் பொய்கெடப் பூரண
மெய்யதாம் இன்பம் என்று விளைவதே."

தாயுமானுர்



திருப்புகழமிர்த மார்கழித்திங்கள் வெளியீட்டின்கண் தாயுமானுர் திருவாய்மலர்ந்த 'ஐவகையெனும் பூதம்' என்னுந் திருப்பாடலின் உரை நடை விளங்குகிறது. அடியேன், அவ்வுரையினையும், பாடலினையும் பயின்றேன். எளியேனது கருத்திற்கு ஒன்று விளங்கியது. அஃது உயிர்களின் கடமை என்பது.

என்றும் நிலைத்தபொருள்கள் மூன்று. அவை கடவுள், உயிர், உலகம் என்பன. முப்பொருள் என்றும், திரிபதார்த்தம் என்றும் பெரியோர் கூறுவர். கடவுள் அறிவின்ப வடிவை யுடையது. உயிர்களின் துன்பத்தை நீக்கி இன்பத்தைத்தரும் இயல்புடையது. உயிர் சார்ந்ததன் வண்ணமாந் தன்மையுடையது. உலகம் உயிரினது அறியாமையை நீக்க ஆண்டவன் கொண்ட கருவியாகும்.

உயிர் அநாதியே செம்பிற் களிம்புபோல் அறியாமையை உடையது. அறியாமையால் துன்பம் உடையது. உயிர் அஞ்ஞானச் சேற்றுள் அழுந்தி மீளவகையின்றித் துன்புறுவதைக்கண்ட தாயிற்சிறந்த கடவுள் அவ்வறியாமையை நீக்க தன்னியல் பாய கருணையினுல் எண்ணுகிறுர். உடனே மாயையைக் கருவியாகக் கொள்கிறுர். உயிருக்குத்துணையை வகுத்துக்கொடுக்கிறுர். முதலில் நிலம், நீர், தீ, காற்று, வெளி என்னும் ஐந்து பூதங்களாலாய உலகைத் தருகிறுர். "ஐவகையெனும் பூதமாதியை வகுத்து" என்

பர் தாயுமானுர்.

நிலம் நீர் தீ, வளிவெளியோடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம் (தொல்காப்பியம்)

பிறகு, நிலைஇயல்பும், இயங்கியல்பும் உடைய உடல்களைத் தருகிருர். இதனைத் திருவாதவூரடிகள்,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்"

என்று அருளியது விளக்கும். நிலையியலினும் சிறந்த இயங்குதிணை யுள்ளும் ஓர்பிரிவை உயர்த்துகிருர். அப்பிரிவு மனிதப் பிரிவு. மனிதப்பிரிவுக்கு அறிகுறி பகுத்தறிவுடைத்தா யிருத்தல். பகுத்தறிவு சிறந்ததொன்ருதலால் ஆன்ருேர் அதனை நல்லறிவு என்று வழங்குவர். ஆகவே இறைவன் நல்லறிவையும் வகுத்தருளுகிருர். நல்லறிவு உடையவரே மக்கள். இல்லாதார் மாக்கள்-விலங்கோடு ஒப்பவர்.

மக்கள் தாமே ஆறறி வுயிரே
மாக்கள் தாமே ஐயறி வினவே. (தொல்காப்பியம்)

நல்லறிவின் பயனுக மக்கள் அறிந்து அதன்வழி நின்று உய்தற் பொருட்டு இறைவன் வேத நெறியையும் ஆகம நெறியையும் கொடுத்துளார். வேதம், மக்கள் அடைய வேண்டிய உறுதிப் பொருள் நான்கனுள் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றை விளக்கமாகவும், வீட்டினைக் குறிப்பாகவும் உணர்த்தும், திருக்குறள் நோக்கி இதனை யறிக. ஆகமம் வீடு அடைதற்குரிய மார்க்கத்தை விரிவாக உணர்த்தும். சைவசித்தாந்த சாத்திரங்கள் நோக்கி இதனை உணர்க. இறைவன் வேதாகமங்களை அருளினுன் என்று வேதாகமங்களே முழக்கும்.

"மறையோதி மங்கை பங்கா"
"மன்னு மாமலை மகேந்திர மதனில்



சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்" (திருவாசகம்)

மறைவழியில் நடந்து, நீரால் உடற்றூய்மையையும், வாய்மையால் அகத்தூய்மையையும் அடைந்த உயிர்கள் சாந்தநிலையை அடைய, இறைவன் படிமுறையிலே சைவ சமயத்தை முதலாக வுடைய சமயத்துறைகள் பலவற்றை அருளுகிருன்.

"சைவ சமயமே சமயம்"
"சைவத்தின் மேற்சமயம் வேறில்லை"
என்பர் பெரியோர்

சாந்தத்தை அடைதற்குரிய சமயத்துறைகள் யாவற்றினும் உழன்ற உயிர்த்தொகுதிக்கு, வாழ்வின் முடிபாகவும், சமயங் கடந்ததாகவும், 'பேசா அநுபூதி' நிலையாகவும் உள்ள 'சமரச நிலை'யை முடிபாக அமைத்தருளுகிருன் இறைவன். அருணகிரி நாத சுவாமிகளும்,

"சோதி யுணர்கின்ற வாழ்வு சிவமென்ற
சோகமது தந்து எனையாள்வாய்" என்று வேண்டி

பேசா அநுபூதி' பெற்ருர்.

பஞ்சபூதமுதல் சமரச நிலைவரை உயிர்களுக்கு முறையே வகுத்துக் கொடுத்து விட்டு இறைவன் அப்பால் நிற்கிருன். உயிர்கள் இவைகளுள் படிமுறையிலேயே கலந்திருக்கின்றன. நமது தாயுமானுர் இவைகளை எல்லாம் கடந்து முடிந்த நிலையாகிய சமரசக் குன்றினுச்சியில் நிற்கிருர். நின்று இவ்வளவு உதவியும் கைம்மாறு கருதாது செய்த பெருங்கையாளனைத் தேடுகிருர். தேடியும் கிடைக்கவில்லை. உடனே தாய்ப்பசுவைக் காணுத இளங்கன்று போலத் திகைக்கிருர், திகைத்து, 'இவ்வளவும் அளித்த நீ' உன்னை நான் அணுகத் தண்ணருள் வகுக்க இலையோ, என்று அலறுகிருர். அழுகிருர். அழுகைக்கு இரங்கும் அப்பனது தண்ணருள் தாயுமானுரிடத்தே பதிகிறது. இதனையே பெரியோர் 'சத்திநிபாதம்' என்று கூறுவர். அழுத ஞானசம்பந்தப் பிள்ளையாருக்கும் பார்வதி தேவியார்தான் பாலூட்டினுர். உடனே ஆண்டவன் தோன்றுகிருன். உள்ளங்குளிர 'காட்சியே' என்றழைக்கிருர்.

உலகில் கடவுளைக் காணமுடியாது; அவன் இல்லை என்று கூறுகிருர்கள். அது உண்மையே; எத்தகையோர் காணமுடியாது?

பொய்யுடையார் காணமுடியாது.

'பொய்வளரு நெஞ்சினர்கள் காணுத காட்சியே' என்றழைக்கிறூர் தாயுமானவர். பொய்யுடையார் எத்தகைய நெறியில் நின்ரூலும் அருளைப்பெற முடியாது. ஆதலால் மெய்நெறியில் நிற்க வேண்டும். உயிர்களின் கடமை மெய்நெறியில் நிற்றல்தான். பாவங்களுள் முதன்மையானது பொய்மை. இவ்வொன்றிருக்கும் இடமே பாவங்களுக்கு எல்லாம் தாயகம். இது இல்லாவிடமே புண்ணிய நிலயம். பொய்மையின் புன்மையை,

"பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று"

என்று சுருங்கக் கூறி விளங்க வைத்துள்ளார். பொய்மையி னின்றும், அழுக்காறு, அவா, வெகுளி, இன்னுச்சொல், கொலை, களவு, காமம் முதலியன பிறக்கும். இவற்றை யுட்கொண்டு கடவுளைத் தேடினுல் காணமுடியுமா? ஆணவத்தை யுட்கொண்டு தேடிய அரியும் பிரமனும் அடைந்த தன்மையை விளக்கும் திருவண்ணுமலையை வணங்குவோமாக.

கொலை களவு கள்காமம் கோபம் விட்டாலன்றே
மலை யிலக்கா நின்னருள்தான் வாய்க்கும் பராபரமே

(தாயுமானுர்.)

நாம் மெய்மை நெறியில் நிற்றல் வேண்டும். பகுத்தறிவை மறைநூல் பயில்வதில் பயன் படுத்தல் வேண்டும். சமயவாழ்வு வாழவேண்டும். சமயநெறி நில்லாதவன் மனிதனுகான். சமரசப் பேறு பெறல் வேண்டும். நாளும் திருவருட் பாக்களால் மனமுருகிக் கரைந்து இறைவன் தண்ணருள் நாடி ஓதுதல் வேண்டும். ஓதி அழுதால் இறைவனது பிறவா இறவாப் பெருவாழ்வு பெறலாம். பெரியோர்களது திருவடிகளை, இச்சிற்றுரையிலுள்ள குற்றங் குறைகளைப் பொறுத்தருளுமாறு இறைஞ்சுகின்றேன்.

புகழும் கல்வியும் போதமும் பொய்யிலா
அகமும் வாய்மையும் அன்பும் அளித்தவே
சுகவிலாசத் துணைப்பொருள் தோற்றமாங்
ககன மேனியைக் கண்டன கண்களே

உ

ஓம்குஹாயநம:

# பச்சைமலைப் பண்பு.

தெய்வச் செந்தமிழ் வழங்கும் மண்டலமைந்தில் (1) ஒன்ருகிய கொங்குமண்டலத்தின்கண், புலவரும், புரவலரும் மலிந்ததும், சான்ருேருடையதும், கோணிலை திரியினும் தானிலைதிரியாது, கோடைநீடினும் மாரிபொய்ப்பினும், தன் வளங்குன்ருது பல்வளங் கொழிக்கும், பொன்னிமா நதியின் பொருபுனற் கரையிலுள்ள ஊர்களில் (சேலம்ஜில்லா நாமக்கல்தாலூகா) பொத்தனூரென்று ஒரூருண்டு. இதனருகில் பசுமை விரிந்து விளங்கும் மரகதக் கம்பளங்கள் போன்ற மருதநிலங்களிடையே, அம்மையின் அருள்வடி வன்ன மணிக்குன்ற மொன்றுளது. இதனை ஆன்ருேர் நினைந்தவரது இச்சை தீர்க்கும் பச்சைமலையெனப் பாங்குற மொழிவர்.

இம்மலையில் வேண்டுவார் வேண்டுவதே யீந்தருளும் தியாக சீலனுகிய முருகவேள் கோயில்கொண்டு பத்தாண்டுக ளாகின்றன.

முழுமுதற்கடவுளாம் முருகப்பெருமான் இங்கெழுந்தருளிய வரலாறு.

பொத்தனூரெனப் பெயரிய இவ்வூரில் மோகனூர் - வைத்தியம், முத்துசாமிப்பிள்ளை என்ற ஒருவர் இல்லறம் நடத்தி வந்தார். அவரது தொழில் மருத்துவம். அன்னூருக்குத் தேவார திருவாசகப் பயிற்சியும் உண்டு. அவர்புனைபெயர் "சுவாமியார்" என்பது. சுமார் பதினைந்தாண்டுகளுக்கு முன்னர் ஓர் நாள் நள்ளிரவில் இருபெரியார்கள் சுடர்விட்டெரியும் விளக்குடன் வந்து இம் மருத்துவரை யெழுப்ப, இவர் எழுந்து அவ்வன்ப ரிருவரை

பின்வரும் அடிக்குறிப்பு.

---

(1) தமிழ்நாட்டு ஐந்து மண்டலமாவன: சேர, சோழ, பாண்டிய, கொங்கு, தொண்டை, மண்டலம் என்பன

யும் யாவர்? என விசாரித்தனர். அதற்கு அவர்கள் "எங்களுக்கு ஒரு மூலிகை வேண்டும். எங்கு கிடைக்கினும் சேகரித் துதவல் வேண்டும். இப்பொழுதே தேவை" யென்று கூற, அதற்கு மருத்துவர் "பச்சைக்கரடு என்று ஒருசிறுமலை மேற்கே அரைக்கல் தூரத்திலிருக்கிறது. அங்கு நீங்கள் சென்று தேடிற் கிடைக்கும்" என்றுகூற, அப்பெரியாரிருவரும் "தாங்களே தான் வந்து எடுத்துத்தரவேண்டு" மென்று மன்றுடினர். மருத்துவரும் அதற்கொருவாறிசைந்துடன் செல்ல இம்மூவரும் மலையில் குறித்த மூலிகையைக் காண்டற்குத்துருவ லாயினர்.

சற்று நேரத்திற் கெல்லாம் மூலிகைக்கென வந்த இருவரில் ஒருவர் மேற்குத்திசை நோக்கி உட்கார்ந்தனர். மற்றையார் அவரருகே நின்றனர். மருத்துவர் "என்னஐயா! வந்த காரியத்தை விடுத்து வேறேதோ செய்கின்றீர்கள்" என்று வினவ. அதற்கவர்கள் "ஐயா! நாங்கள் வந்த நோக்கம் வேறு; அதை நீர் அறியீர் போலும்" எனலும், மருத்துவர் திகைப்புற்றவராய்ச் சற்றே தயங்கிப்பின் தெளிந்து "அற்றேல். உமது நோக்கந்தான் யாது" என, மேற்குநோக்கி யமர்ந்தவர் "நான் இருப்பது வட்டமலை, (2) இங்கு தங்கவேண்டு மென்னும் அவா மிக்கூர்ந்து வந்தேன். இவர் உய்யக்கொண்டான்மலை (3) என்னுடன் வந்தவர். எமக்கு இங்கு இடம் அமைத்து வைப்பீரா" என்று அருண்மொழி புகன்று கண்கொள்ளாக் கவின்பெறு காட்சியும் நல்கிக் கதுமென மறைந்தனர். உடனே மருத்துவர்க் குற்ற இன்பவிளைவை யாரால் எடுத்துரைக்கலாகும். ஆடினர், பாடினர், அழுதனர், தொழுதனர், என்னே யெம்பிரான் கருணையிருந்தவா வென்று விம்மித முற்றனர்.

பின்னர் வீடுவந்து சேர்ந்தனர். மறுநாட்காலை பல அன்பர்

(2) வட்டமலை கொங்குநாட்டுக் குன்றுதோறாடலுள் ஒன்றாகிய சுப்பிரமண்ய க்ஷேத்ரம்.

(3) உய்யக்கொண்டான்மலை: திருச்சிராப்பள்ளிக் கருகில் உள்ளது



களிடமும் செல்வர் களிடமும் சென்று சென்று நிகழ்ந்தன கூறி அன்புற்று இன்புற்று அங்கு அறுமுகத் தண்ணலார்க்குத் திருக் கோயில் செய்விக்கத் தொடங்கினர்.

ஊர்ப்பொதுமக்கள் உதவிய நிதியால் மேற்குப் பார்த்தசந்நிதியமைத்துச் சென்ற பிரமோதூத ஆண்டில் விநாயகர், மல்லிகார் ஜுனேசுவரர், மரகதவல்லி அம்மை, நவக்கிரகம், வீரபத்திரர், இடும்பர், வரதராஜப் பெருமாள், முதலிய தேவதைகளுடன், என்று மகலாத இளமைக்காரனும் முருகவேளுக்கு அஷ்டபந்தன மகாகும்பாபிடேக முதலியனவும், உயர்திரு K. V. கருப்பப்பிள்ளை யென்பார் தலைமையில் மற்றுமுள்ள அன்பர்களுதவி கொண்டு அதிவிமரிசையாக நடத்துவித்துப் பெரும் பேறுற்றனர்.

அன்றுமுதல் உயர்திரு, K. V. கருப்பப்பிள்ளை யவர்களே இவ்வாலயத்திற்குச் சிறப்பொடு பூசனைக்கு வேண்டிய நிபந்தங்களும் அமைத்து இனிது நடத்தி வருகின்றனர். அன்னருக்கு முருகன் அருள்புரிவானாக. அன்னார் வாழ்க.

இம்மலையில் எழுந்தருளி யிருக்கும் முருகப் பெருமான் பேரில் ஓர்பதிகம் ஈரோடு E. m. அசன்கான் சாகிபு என்னும் முகமதியப் புலவரொருவராற் பாடப்பெற்றுளது. சைவப்புலவா, மணிவாசகம் என்பார். பஞ்சரத்தினப் பாமாலை யொன்றும் இயற்றி யுள்ளார். முற்கூறிய பதிகத்தின் ஏழாவது பாட்டில் இத் தலத்தின் வரலாறு விளங்கக் கூறப்பட்டுளது.

அப்பாடல்:---

மஞ்சட ரிருட்டிலொரு நாளுனது தொண்டனும்
வைத்தியஞ் செய்துவந்த
மாமுத்து சாமிமனை வந்தழைத் தேகிநின்
மலைமீதிலே யிருத்தி
நெஞ்சங் களிக்கவோ ராலயமே னக்கிங்கு
நீகட்ட வேண்டுமென்று
நேரினிற் சொல்லியவ் வாறுநிறை வுற்றதால்
நீநிலைத் தடியார்களின்
வஞ்சகம றுத்தினிய ரஞ்சித மளித்துநித
மங்களம் வழங்கி வருவாய்

மணிவாச கா! மதி கனிதேசி கா! நிறை
மனமேவுஞ் சரணலயா!
பஞ்சமே யில்லாத போத்தனூ ருக்குமேல்
பாகநன் செய்கள் சூழும்
பச்சைமலை மீதுவாழ் வச்ரவே லாயுதப்
பாலசுப்பிர மண்யனே

இவ்விரு இயற்றமிழ் நூல்களைத் தவிர உடுமலைக் குறிஞ்சிக் குமரானந்த சுவாமிகளென்னும் பெரியாரால் பாலதண்டபாணி பஜனாமிர்த பக்திரசக் கீர்த்தனம் என்னும் ஓர் இசைத்தமிழ் நூலும் செய்யப்பட்டுளது.

இம்மலையின் அதியற்புத விசேடக் காட்சிகளனைத்தும் இங்குவந்து தெரிசித்தவர் களுக்குத் தான்தெரியும். இம்மலையில் திங்கள்தோறும் விசேடஉத்ஸவாதிகளை அன்பர் பலர் கொண்டாடி அபிஷேக ஆராதனை அன்னதான முதலியனவும் மிகச்சிறப்புற நடத்தி வருகின்றனர். இம்மலையில் திருப்பணிசெய்ய அன்பர்கள் எண்ணியுள்ளார்க ளாதலின், அதற்கு யாதொரு இடையூறு மின்றி முருகன் முடித்து வைப்பானாக. அன்பர்கள் உதவியை நாடுகின்றனர்.

இச்சையெலாம் நல்கி இகபரமும் தந்தருளும்
பச்சைமலைக் கந்தன் பதம் வாழி வாழியே.

வே. இராமசாமி ஐயர், போத்தனூர்.



